ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

திருக்கோட்டியூர்ச்

சௌமியநாராயணமூர்த்தி

# பிள்ளைத்தமிழ்.

இது

மதுரைஜில்லா, திருப்புத்தூர்த்தாலூகா

சிறுகூடற்பட்டி என்னும் செங்நெற்குடி

சாமிகுட்டி ஐயர் என்று பெயர்வழங்கும்

ப்ரஹ்மஸ்ரீ,

## சே. சுப்பராய ஐயரவர்களால்

பாடப்பெற்று

ஷை செங்நெற்குடியிலிருக்கும்

வீர. ப. முத்தையா செட்டியார்

திரவிய சகாயத்தினால்

ஷை நூலாசிரியர் மாணாக்கரி லொருவராகிய

கோட்டையூர்

## மீ. சுப்பையயரவர்களால்

சென்னை:

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# விளம்பரம்.

இப்புத்தகமும் செய்யுள் நடையாகத் தமிழில் மொழிபெயர்த்த புராணரத்நமென்னும் ஸ்ரீ விஷ்ணுபுராணமும் வேண்டியவர்கள் சென்னை முத்தியாலுபேட்டை பவளக்காரத் தெரு 27, 28-வது கதவிலக்கமுள்ள கிருகத்தில் சி. பள. மு. பழனியப்பசெட்டியா ரவர்களிடத்திலும், மதுரைஜில்லா திருப்புத்தூர்த் தாலூகா சிறுகூடற்பட்டிப் போஸ்டு செந்நெற்குடி சே சுப்பராய ஐயரவர்களிடத்திலும், விலை கொடுத்து வாங்கிக்கொள்ளலாம்.

ஸ்ரீ

ராமஜயம்.

# சாத்துகவிகள்.

ஸ்ரீமத் கம்பராமாயணம் பாலகாண்டம்
பிள்ளைப்பெருமாளையங்கார் அஷ்டப்பிரபந்தமுதலியவைணவநூல்களுக்கும்
தாயுமானவர் பாடல் திருவாசக முதலிய சைவநூல்களுக்கும்
தனிப்பாடற்றிரட்டிற்கும் ஒருதுறைக் கோவைக்கும்
இன்னுஞ் சில சிறுநூல்களுக்கும் உரைசெய்தவரும்
திருமந்திரார்த்தம் பகவத்விஷய முதலியவற்றின் பரிசோதகரும்
திருக்குறள் முழுதும் பரிமேலழகருரையோடு தெலுங்கில் மொழிபெயர்த்து
த்ரிவர்க்கப்ரதீபிகையென்று பெயர்தந்தவருமாகிய
ப்ரபந்த வித்வான் காஞ்சீபுரம்
ராமசாமிநாயுடு அவர்களியற்றியது.



சீரேறு திருக்கோட்டி யூர்ச்சௌம்ய நாரணன்றன் றிருப்பொற் றாட்கோர்
ஏரேறு செந்தமிழ்ப்பிள் ளைக்கவித்தார் சூட்டியிசை யெய்தி னானல்
பேரேறு புகழ்ச்செந்நெற் குடிச்சேடன் முன்செய்தவப் பேறாய் வந்தோன்
நீரேறு மெழிற்சுப்ப ராயப்பேர்க் கவிஞர்பிரா னீணி லத்தே.



இந்நூலாசிரியர் மாணாக்கர்களி லொருவனாகிய
கோட்டையூர்
மீனாட்சி சுந்தரமய்யர் புத்திரன்
சுப்பையன் இயற்றியவை.



பொன்பூத்த கவுத்துவமு மணிமறுவும் பூமகளும் பொருந்தி நாளு
மன்பூத்த மணிமார்பு மறைகளொடு துளவமிக மணக்குந் தாளுங்
கொன்பூத்த வைம்படைகொ டிருக்கரமுங் குலமலரின் குணத்தைக் காட்டு
மின்பூத்த கருணைபொழி யிருவிழியு முறுங்கனம்போன் மேனிவாய்ந்தோன்.

கருக்கோட்டி தமிற்சுழலுஞ் சீவர்கட்குக் கதியளிப்பான் காமமாதித்
தருக்கோட்டிப் புரந்தருளுஞ் சௌமியநா ராயணமா றன்சீர் கூறுந்

திருக்கோட்டியூர்ப்பிள்ளைத் தமிழதனைப் பாடிமிகு சிறப்புப் பெற்றான் [ன்.
றருக்கோட்டிற் புயன்மருவுஞ் செங்நெல்வளம்பதியுறைவான் றருமச்சார்பா

வெற்பிலுறை குறுமுனியி னிலக்கணமு மிலக்கியமும் விரும்பிக் கற்ற
கற்புடையா னூல்வகையாங் கவிபொழியு முகிலெனக் கருத நின்றான்
புற்புதமா முலகவின்ப மெனத்தெளிந்து பரமனடிப் போதி னுய்க்கும்
பொற்புமிகு மனமுடையான் சுப்பரா யப்பெயர்கொள் புனிதன் றானே.



## கடவுள்வணக்கம்.



பூமேவு நான்முகனும் போற்றுதிருக் கோட்டியில்வாழ்
மாமேவு திண்புயத்து மாதவன்மேற் - பாமேவும்
பிள்ளைத் தமிழ்பாடப் பேருலகை முன்னளந்த
கள்ளவிழ்பூந் தாமரைத்தாள் காப்பு.



## அவையடக்கம்.

கற்றறிந்தோ ரென்புன் கவியிற் பெரிதுமுள
குற்றங் குணமாகக் கொண்டருள்வார் - வெற்றிமிகு
மாரன் றனையளித்த மாயன் றிருக்கோட்டி
யூரன்பிள் ளைத்தமிழென் றோர்ந்து.



ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

---

திருக்கோட்டியூர்ச்

சௌமியநாராயணமூர்த்தி

# பிள்ளைத்தமிழ்.

## முதலாவது காப்புப்பருவம்.

### கண்ணபிரான்.

மதிகொண்ட திருமுகமுங் கருணை பூத்த மலர்விழியு நறுங்குழலின் வனப்பும் வானோர், துதிகொண்ட விருசரணு முறுவல் பூத்த துவர்வாயுந் துலங்குநந்தன் றோன்றல் காக்க, நிதிகொண்ட கலைமருங்கி னிலவக் கோல நேமிவலஞ் சுழலவிரு விசும்பிற் செல்லுங், கதிகொண்ட கருடன்மிசைத் தோன்றி யும்பல் காத்தருள்கோட் டியன்பிள்ளைக் கவியை மாதோ. (க)

### திருமகள்.

சங்கேறு தவளத் தரங்கமுயர் மணிவீசு சலநிதி கடைந்தநாளிற் றண்மதியொ டுங்கலச வெண்சுதையொ டுங்கனக சததளம லர்ந்த தந்த, பங்கேரு கத்திற்பி றந்தாயி ரப்பொறிப் படநாக மீதுதுயிலும், பச்சைமால் வரைமார்பு படர்காம வல்லியைப் பைங்கிளித னைப்பணிகுவாஞ், செங்கேழ் மணிப்பரிதி தங்கேழ் பரித்தடந்தேரினை மறைத்தவாழிச், செல்வனைப் பல்லவுணர் சிரமலகை கொண்டிடச் சிலைவளைத் தழலுயிர்க்கும், புங்கவெங் கணைதொட்ட சங்கவொண் கையனைப் புவியுண்ட கனிவாயனைப், போதனைக் கோட்டியுறை நீதனைப் புனிதனைப் போற்றுமென் கவிதழையவே. (உ)

### நான்முகக்கடவுள்.

செந்தேனை யுண்டுபெடை வண்டொடு சுரும்புகள் செறிந்தாடு நூற்றிதழ்ப்பொற், றெய்வத்திருத்தா மரைக்குட் பிறந்துபல செகமுமன் னுயிர்யாவையுந், தந்தரனை நான்மறை விளம்புநான் முகனைத் தரங்கமா னதவாவிசேர், தண்சிறைய னங்கடவு வெண்கமல மங்கையிறை தன்னையஞ் சலிசெய்குவாஞ், சிந்தா மணிக்கரச னுந்தேவ ருந்

தாது சிந்துமைங் தருவலர்ந்த, தேமலர் சொரிந்தடி பணிந்திடக் க
ருணைபுரி தேவனைப் பூவைநிறனைக், கொந்தார் நறுந்துள வணிந்தம
ணி மார்பனைக் குவலயமின் மணவாளனைக், கோகனக பாதனைக்
கோட்டிநகர் நாதனைக் கூறுமென் கவிதழையவே. (ரு)

## கலைமகள்.

அவனியொடுபல புவியு மினிமைகொ ளளையு மமுதுசெய் தவனை
விடமுமி, முரவின் மணிமுடி நெளிய நடமிடு மரசை மதனனை யருளு
மிறைவனை, யமுத மொழுகிய பவள விதழணி யணியுமலர்மகள் விழி
யி லுறைமணி, யனைய தசரதன் மகனை யிளமுலை யவனி மடவரல்
பதியை யணிகெழு, குவளை மலர்விழி யிசையி னறைபொழி குதலை
மடமொழி பெடையி னடையயில், குடவர் தருமட மகளி ரொடு
மொரு குரவை நடமிடு பதனை யிமையவர், குலமொ டறமுனி வர
ை நலிதரு கொடிய விரணிய னுடலை வகிர்தரு, குழலி னிசைபகர்
வரனை மொழிதமிழ் குறையின் மொழியென வளர மறுவறு, தவள ம
தியென நிலவு விரிசத தளமென் மலரிடை யுலவுகலைமக, டரணி முத
லிய புவன முதவிய தலைவன் மகிழ்தரு துணைவி யிணையறு, தரள நி
ரையணி பருமமொளிதிகழ் தளரு மிடையின ளமுத மதிவரு, சல
நிறு லாயென விலகுமுடையின டகதகெனவொளிர் படிக வடிவின
ள், கவள மதகரி யுலவை பொருமிரு களப புளகித கடின முலையின
ள், கடவு ளனமென வுலவு நடையினள் கறையின் மதியென விரை
கொ ணுதலினள், கலச வமுதகு தெளியொ டளவிய கலைக ளொடு
பல சுருதி மொழியினள், கதிர்கொ டளவின முகையி னகையினள்
கடிகொண் மலரடி முடியி னணிகுவாம். (ச)

## சிவபெருமான்.

சங்கத் தரங்கக் கடலுடுத்த தரணி மடவா ளடிவருடத்
தவள மதியார் பாற்கடலிற் றண்டா மரையின் பொகுட்டிருந்த
மங்கைக் கரசி யுடன்மகிழும் வானோர்க் கரசை வீடணற்கு
மௌலி தரித்த பெருமானு மகவைப் புரந்தின் னருள்புரிக [ளிக்காப்
பொங்குஞ் சினத்துப் புன்னகையாற் புரத்தைப்பொடித்துச் சிறுமு
பொருது சமனை விழவுதைத்துப் புலவர்ப் புடைத்துப் புகழ்படைத்த
வெங்கட் பகுவா யடலரக்கன் விறற்றோண் முறித்துத் தழல்கால்வெவ்
விடத்தைக் களத்திற் செறித்தரங்கில் விளையாட் டயரும் வித்தகனே.

## உமையவள்.

கொண்டல்கண் படுகுழற் காடேந்தி யிருதனக் குலவரை சுமந்
துநாளுங், கொடியிடை நுடங்கியிட வறம்வளர்க் குந்தலைவி குமரனை
ப் பெற்றசெல்வி, கண்டுபடு குதலையமு தொழுகுசெஞ் சொற்குமரி
கண்ணுத லிடத்தமர்ந்த, கமலவிழி மடமாது மலைவல்லி யின்பதக் க
மலநாண் மலர்பணிகுவாம், வண்டுபடு துளவச் செழுந்தா ரணிந்தபு
ய மாயனைத் தாயுமையினல், வளமுங்க டந்துரக மன்னன்முடி யிற்
றுங்கு வையமுண் டுமிழ்மெய்யனைக், குண்டுபடு மடுவிற் கராவின்வா
ய்ப் பட்டமத குஞ்சரத் திடர்தவிர்த்த, கோலநர சிங்கனைக் கோச
லைதன் மைந்தனைக் கூறுமென் கவிதழையவே. (சு)

## தே வே ந் தி ர ன்.

தெளிதங்கு கற்பக நறுந்தேற லூறுபைந் தேமலர்ச் சோலைநிழ
லிற், றெய்வயா ழின்னிசை கடுப்பவர மடமாதர் செப்புமின் குரலோ
தையுங், களிதங்கு கந்தருவ ரின்னரம் போதையுங் காமர்பெடை
வண்டினொலியுங், கச்சுமுலை யயிராணி யிளநலம் விளைத்திடக் கனகமு
லை மாதர்பல்லோர், துளிதங்கு பாற்கட லெனக்கவரி வீசிடச் சொன்
முனிவ ராசிகூறத், துங்கமணி யாதன மிசைச்சொர்க்க வரசுபுரி தோ
ன்றல்பைங் கழல்பணிகுவாம், வளிதங்கு வானமுதன் மண்ணும்ப
டைத்துப்பின் வாரியுண் டுமிழ்வாயனை, மண்டலம் புகழ்திருக் கோ
ட்டிநகர் மேவுதிரு மாலைப் புரக்கவென்றே. (எ)

## வி நா ய க ர்.

கங்கைமதி தவழ்வேணி யங்கைமழு வணிநீல கண்டனுத விய
கொண்டலைக், கம்பமத வாரண முகத்தனைச் செக்கர்விரி கமலபதனை
க் குதலைமென், மங்கையுமை புதல்வனைச் செங்கையங் குசமுற்ற வர
தனைச் சரதனைக்கோ, மானைக் குலத்தமரர் கோனைப் பகீரதியின் மை
ந்தனைச் சிந்தைசெய்வாஞ், சங்கணி தடங்கரனை யங்கமல நாபனைத்
தாமரை மகட்கிறைவனைத், தாரணியெ லாமுண்ட வாயனைத் தூய
னைத் தண்டகோ தண்டதரனைக், கொங்கையிடை மங்கையர்க டங்கெ
ழுமு வெண்ணெய்முன் கொண்டோடி யாடிநகருங், கோலமணி வ
ண்ணனைக் கோட்டியுறை கண்ணனைக் கூறுமென் கவிதழையவே. ()

## முருகக்கடவுள்.

தமர விலைசயளி கனுலு மதுவிரி தளவ நறுமலர் பூங்குழற் சூட்
டினள், தபன னெனவொளி திகழு மணிபுனை சரியி னெடுதொடி கா

ந்தளிற் சேர்த்தினள், குமரி யிமையவர் தலைவ னருளிய கொடியி னிணைமுலை தோய்ந்துநட் பாக்கிய, குமர னறுமுக னிமய மகடூஉ குழவி யெனவரு சேந்தனைப் போற்றுதும், சிமய நிகர்முலை யிடையர் மடவியர் செறிய விசைகெழு தீங்குழற் பாட்டினன், செடிகொ டிணியுட லவுண ரெனுமிருள் சிதைய வடல்புரி நாந்தகத் தோட்டினன், திமிர வருபுனல் யமுனை மடுவினி னிலவு பதமலர் பாம்பினிற் பூட்டின, னியல னளவறு புவன நிரைதொறு நிறையு மலர்மகள் காந்தனைக் காக்கவே. (கூ)

## சத்தமாதர்கள்.

மணிகொண்ட கடலிடை யுதிக்குங் கலைத்திங்கள் வதனவைணவியெனும்பொன், மாதுமா கேச்சுவரி யபிராமி யொப்பரிய வாராகி மறுவில்வாஞேர், பணிகொண்ட கற்பக நறும்பூவி னறைகமழ் பசுந்தார் முடித்தகூந்தற், பாவை கௌமாரி பைரவியிவர்க ளெழுவர்தம் பாதமலர் மலர்பணிகுவா, மணிகொண்ட காந்தட் செழும்போதில் வண்டின மரற்றச் சிலம்பலம்பு, மருணமாங் தளிரிணை வருந்தப்ப ரிந்துவிளை யாடிளங் கோவியரொடுந், திணிகொண்ட வெழுபரித் தேரவ னளித்தநதி தீரத்து வந்துலாவுஞ், செய்யசிறு பாதனைத் துய்யமறை தேடரிய தேவைப் புரக்கவென்றே. (கo)

## முப்பத்துமூவர்.

கண்ணகன் ஞாலத்தி ருட்பிழம் பகலமென் கமலநாண் மூகைபவிழவெண், கலைமதியி னொளிகெட விளங்குபன் னிருவரைக் கனமுற்ற பதினொருவரை, விண்ணகர மூறைமருத் துவர்களோ ரிருவரை விளங்கெழில் விரிக்குமேனி, வித்தகர்க ளெண்மரைச் சித்தமிசை வைத்தவர்கள் விரைமலர்த் தாள்பணிகுவாம், பண்ணக மிருக்கும் வேய்ங் குழலிசைத் தாயர்தம் பாடியிற் கூடியாடும், பாலரொடு கானகத் தேனுமான் பின்சென்ற பவளவாய் முகிலையேழ்நாட், டிண்ணகநெடுங்குடை யெடுத்துமழை காத்திடுந் தேவனைக் கோட்டிமேவுஞ், செங்கமலை மார்பனைக் கங்கைதவழ் பாதச்செழுந்தள வனைக்காக்கவே. (கக)

---

## உ-வது செங்கீரைப்பருவம்.

நீர்கொண்ட சலதிப் பெருக்கினே ராலிலையி னிலைகொண்டு கலைகண்டிலா, நின்மலக் குழவியாய்ப் புனன்மங்கை புந்தியு ணெகிழ்ந்துதா லாட்டிநிற்பக், கார்கொண்ட தூயவடி வத்தினெடு நாபியிற் கமலமல ரொன்றுதந்தக், கந்தமல ரிற்றந்த சதுமுகப் பிரமனுங் களி

வண்டு சுருதிபாடப், பார்கொண்ட பிரளயத் தோடித்த வழ்ந்துசெம் பவளவா யமுதமூற்றப், பச்சென்ற விரல்சுவைத் திச்சையா லுலகம் படைத்துவிளை யாட்டயர்ந்து, தேர்கொண்ட வீதிதிகழ் கோட்டிவரு முதல்வரீ செங்கீரை யாடியருளே, செங்கைத் தலத்திலொரு சங்கைத் தரித்தமுகில் செங்கீரை யாடியருளே. (க)

ஆலைக் கரும்பினை வெறுத்தசொற் கமலமனை யாட்டிபுவி மங்கையினொடு, மாயிர முகப்பாந்த ளணையிற் பயோததியி லறிதுயி லமர்ந்த தேய்ப்பச், சோலைக் கருங்குயின் மிழற்றிடுங் கோட்டியிற் றுகளிலட்டாங்கமாகுஞ், சுடர்விமா னப்பெருங் கோயிலிற் கமலவிழி துயில் பரந் தாமவாதி, நூலைத்த ரும்பிரண வத்தினைக் கமலற்கு நுவல்வுற் றனந்தகால, நோற்றிடு மவன்பொருட் டாய்ப்படைப் புதவிப்பி னுண்ணிடை யசோதைமனையிற், சீலத்த ரும்பெறற் குழவிவடி வானவன் செங்கீரை யாடியருளே, செங்கைத் தலத்திலொரு சங்கைத் தரித்தமுகில் செங்கீரை யாடியருளே. (உ)

அண்டத்தி னுற்றவெழு புவனியுமி மைப்பிலா ரணவுவா னுடுமலைகளூ, மூழிகொண் டிடுகற்ப முடிவிலப் புனலான தையரீ கோலமாகி, மண்டலம ளித்தநா ளுன்கேச மொன்றனுனி மாத்திர மினைத்ததன்றி, மற்றுமொரு செயலில்லை யென்னுமத் தகையொழிய மழலைமென் குழவியாகி, யண்டர்தம் பாடியில மர்ந்தநாட் பூங்குழல சோதையிரு கைப்புனிதநீ, ராட்டியற லோட்டிவளை மாட்டியணி பூட்டிவிளை யாட்டிநுதன் மண்டீட்டியே, செண்டனைய கொங்கையில ணைக்கவமு துண்டவன் செங்கீரை யாடியருளே, செங்கைத்த லத்திலொரு சங்கைத்த ரித்தமுகில் செங்கீரை யாடியருளே. (ங)

வானுடை ருக்கிறைவர் மண்ணுடை ருக்கிறைவர் மாநாக ருக்கிறைவரும், வந்துதொழ நின்றபத பங்கையமி ரண்டினும் மணிநூபு ரங்கலிப்பப், பூநாடு மிணைவிழியின் மையிட்டு நெற்றியிற் பொன்னுடு புகழ்திலப், பூஞ்சுட்டி சாத்தியொளிர் நவமணியி ழைத்தசெம் பொற்பட்ட மொளிதழைப்ப, மீனுடு கடலிடையு தித்தகலை மதியமென மிளிர்முகமி லங்கவீதி, விளையாடு மாயர்தஞ் சிறுவரோ டுறவாடு வேதமுத லாம்விளக்கே, தேனுடு பூம்பொழிற் கோட்டிநக ரதிபனீ செங்கீரை யாடியருளே, செங்கைத்த லத்திலொரு சங்கைத்தரித்தமுகில் செங்கீரை யாடியருளே. (ச)

நாவலம் பொன்னினவ மணிகுயின் றிட்டவரை ஞாணரையினிட்டொளிகுலா, நாகமணி யிற்புனைச தங்கைநான் மறைதேடு நனி

னப்ப தத்திலிட்டுக், காவல்புரி யாழியுறை கையினிவ் வாழிவரு கதிரனைய வாழியிட்டுக், காமனைய ளித்திடுங் காமனிவ னென்னவிரு காதிற்கு தம்பையசைபக் கோவலர்வ திந்தமனை புக்குரியின் வைத்ததயிர் கொண்டுண்டி டக்கண்டவக், கோவியர்மு னின்றடி வெண்ணெயுத வத்தின்ற கோலப்ப சுங்குழவியே, தேவியலர் மங்கைவருமாழியி லுறங்குபர செங்கீரை யாடியருளே, செங்கைத்த லத்திலொரு சங்கைத்த ரித்தமுகில் செங்கீரை யாடியருளே. (ரு)

வேறு.

காவிற் கமழ்தரு பூவிற் றடநிறை கமலக் கடிமலரிற்
களிவண் டினமும் பெடையுந் திரியக் கவினுறு மாடமிசை
யேவிற் பொலிதரு செங்கண்ம டந்தைய ரினமுந் திரியவய
லெங்குங் கடையர் மடந்தையர் திரிதரு மெழில்சூழ் குலநாடா
நாவிற் கலைமகண் மேவச் சுருதிசொ னான்முக னைத்துதிசேர்
நளினத் திடையுத வித்திரு யாழியி னண்ணுமெ ழிற்கடலே
யாவிற் றிகழு மிடைக்குடி லுற்றவ வாடுக செங்கீரை
அந்தர முந்தொழ நின்றப ரஞ்சுட ராடுக செங்கீரை. (சு)

பந்தவி னைத்தொட ரும்பரி யப்பரி பவபவ சலதிகெடப்
பாதம லர்த்துணை மேவடி யர்க்குயர் பரகதி தந்துமலர்க்
கொந்தல ரும்பொழி லைந்தரு மேவிய கொற்றவ னுய்த்தகருங்
கொண்டன்ம ழைத்துளி யன்றுத டுத்தருள் கோவல மாவலருஞ்
சிந்திம லர்க்கண்ம டந்தைய ரைப்பொரு திண்கழை கொண்டமதத்
தேவைய ளித்திடு மாவைம ணந்தவ செங்குழ தங்குலவு
மந்திம திக்கெழி றந்தமு கத்தவ னாடுக செங்கீரை
அந்தர முந்தொழ நின்றப ரஞ்சுட ராடுக செங்கீரை. (எ)

வண்டட ருந்துள பத்திரு மாலைவ ரைப்புய நின்றாட
மணிவளை கொடுகடை கடல்வரு திருமணி மார்பின சைந்தாடக்
கண்டட ருஞ்சொன்ம டந்தைய ரிருவர்க ளித்திரு புறமாடக்
கஞ்சம லர்த்திரு மைந்தனொ டெண்டிசை காவலர் கொண்டாடப்
பண்டரு நான்மறை யுங்கலை யும்பல பாவுமு வந்தாடப்
பகிரதி வருமிரு பதமணி யணியொடு பலபல புவியாட
அண்டரொ டும்பல தொண்டரு மாடிட வாடுக செங்கீரை
அந்தர முந்தொழ நின்றப ரஞ்சுட ராடுக செங்கீரை. (அ)

மந்தர மென்றுய ரும்புய நந்தனன் மைந்தா சிந்தாகி
மலர்வரு சதுமுக னுலகின தளவும்வ ளர்ந்தா யெந்தாயென்
றந்தர ருந்தொழ முன்புவ னங்கள ளந்தாய் சிந்தாத
வடலிர ணியனுட றனைநுதி யுகிரின ரிந்தாய் கொந்தாருங்
கந்தர மென்குழ லண்டர்ம டந்தையர் கண்டா வண்டாடுங்
களிநற விதுவென வடியர்த மனமுறை கண்டே பண்டோர்நாட்
சிந்துர முன்பரு டந்திட வந்தவ செங்கோ செங்கீரை
சிலைகொடு கரனுயிர் நிலைகெட வடுமுகில் செங்கோ செங்கீரை. (௯)

மணியணி யணியிட மடவிய ரெனுமயின் மஞ்சே நஞ்சேறும்
வனமுலை யொடுவரு மலகையி னுயிர்கவர் மைந்தா நந்தாத
பணிமுடி மிசைநட மிடுசுர நதிகமழ் பைந்தா ளெந்தாய்நின்
பழமறை முழுதுண ரொருதிரு மதலைப யந்தாய் கன்றுகுங்
குணில்கொடு விளவினை விழவெறி சிறிய குழந்தாய் செந்தாது
குடையளி யினமுர லடவியின் வனமணி குன்றே யென்றோதுந்
திணிபுய வரைகொடு திருவொடு மகிழ்பவ செங்கோ செங்கீரை
சிலைகொடு கரனுயிர் நிலைகெட வடுபர செங்கோ செங்கீரை. (௧௦)

## ௩-வது தாலப்பருவம்.

செங்கட் கடையர் மடமகளிர் செய்யிற் களையென் றெடுத்தெறிந்த
செய்ய கமல நறும்போதுஞ் சேதாம் பலுமற் றவர்விழியிற்
பைங்கட் குவளை நாண்மலரும் பழகி நெடுநாட் குடியிருந்த [றே
பண்புந் தவிர்த்த புல்லர்தம்மேற் பகைத்துப் பயனென் னிறத்துமென்
வெங்கட் கதிரின் கரம்புக்கு வெதும்பா முன்ன மதுநுகர்ந்த
விளரிச் சுரும்ப ரவையுலர விலைமா தரினின் னருள்துணைப்புற்
றங்கட் பொழில்சேர் கோட்டிநகர்க் கரசே தாலோ தாலேலோ
அம்பி னரக்க ருயிர்தொலைத்த வழகா தாலோ தாலேலோ. (௧)

கொங்கிற் பொலியுங் குழன்முடித்துக் குலவுங் கடையர் மடமானார்
குளிர்வண் புனலார் கழனிதொறுங் குரவை யயருங் குரலிசையாற்
றெங்கிற் பொலியு நறுங்கமுகின் றிரளி னிறைபொன் னூசறொறுஞ்
சேர்ந்து கொழுந ருளமகிழச் செறிந்து விளையா டிளமாதர்
சங்கிற் பொலியுங் கரத்தவளைத் தழுவித் துயில வவர்குழலிற்
றங்குஞ் சுரும்பர் பாண்முரலத் தழைத்த சிறைமென் மயினடிப்ப
வங்கட் டருத்தேன் சொரிகோட்டிக் கரசே தாலோ தாலேலோ
அம்பி னரக்க ருயிர்தொலைத்த வழகா தாலோ தாலேலோ. (௨)

வாட்டும் பசியாற் கொடும்பிணியான் மகளிர் மயக்கால் வருபொருளா
மண்ணால் வருந்தி யீன்றெடுத்த மகவான் மெலியா துன்பதத்திற் [ன்
பூட்டு மன்பர் சிலரொழியப் புனைசேர் மாயை யெனுமிருளிற்
புக்கு மீளுஞ் செயலின்றிப் புவனத் துழன்று பன்னெடுநா
ளீட்டும் வினையா லனித்தவுடம் பெடுத்துக் கழித்துச் சுழன்றுசுழன்
றிந்த மங்குந் திரியநின்றொண் டில்லார் பலரைப் பம்பரம்போ
லாட்டும் பரனே திருக்கோட்டிக் கரசே தாலோ தாலேலோ
அம்பி னரக்க ருயிர்தொலைத்த வழகா தாலோ தாலேலோ. (ங)

வண்டு படியு மலர்ப்பொடியு மதுவும் பெருகுங் குழன்முடித்த
வடிவெங் கணையொத் தடல்புரியு மழைக்கண் மடவார் பயிலரங்கிற்
றண்டு மிழற்று மின்னிசையாற் றழைத்த கலவ மயிற்குலங்கள்
தரங்கம் பொலியும் புனற்றடத்தின் றருவி னடித்தல் கழைமாதர்
விண்டு நனிநின் றுடலொப்ப வியன்மா முகிலி னொலியியம்போல்
விளம்பக் கானங் குயிலிசைப்ப வேனிற் கிழவன் விற்கரத்தோ
டண்டும் பொழில்சூழ் கோட்டிநகர்க் கரசே தாலோ தாலேலோ
அம்பி னரக்க ருயிர்தொலைத்த வழகா தாலோ தாலேலோ. (ச)

துளிக்கு மமுதம் பெருகிவருந் தூய மதியி னிறம்பெற்றுத் [ற்
தொனிக்குஞ் சங்குஞ் சக்கரமுந் தொடித்தோ ளவுண ருடற்கறையி
குளிக்கும் வாளுங் கொடுமரமுங் கூற்றுங் குலையுங் கொலைத்தண்டுங்
கொண்டற் படிவத் திருவுருவுங் கொண்டெ னுளத்திற் குடிகொண்டு
களிக்கு மதுவாய் மறைமுடிவுங் காணு முதலாய்க் கரந்துறையுங்
கருணை லயனே சதுமுகனுங் காணாப் பதத்தைப் பழவடியார்க்
களிக்கும் பரனே திருக்கோட்டிக் கரசே தாலோ தாலேலோ
அம்பி னரக்க ருயிர்தொலைத்த வழகா தாலோ தாலேலோ. (ரு)

வேறு.

பூகத் தருநிறை சோலைக் கிளியிசை பொருவுமி ளங்குரலார்
புளினத் தடமல ரலையக் குடைதரு புனலின றுங்கலவை
மேகக் குழலளி பாடக் களல்வுறு விரைமலர் மென்பொடியும்
விழுநறை யும்பெரு கச்சின வாளைவெ ருண்டும ருண்டுயரு
மாகத் திடைவளர் தாழைக் குலைவிழ வாவியெ ழிற்பணைசேர்
வண்டமிழ் நாடுபொ லிந்திடு கோட்டிய வருபிற வித்துயர்தீர்
தாகத் தமரர்வ ணங்குப தத்திறை தாலோ தாலேலோ
தண்டொடு சங்க மிலங்கு தடங்கர தாலோ தாலேலோ. (சு)

செங்கய றங்கு தடங்கண் மடந்தையர் சிந்தை மருண்டிடவெண்
டிங்களெ ளுங்குடை யெங்கும் விளங்கத் தெருமர லுறுமனையார்
கொங்கை வெதும்பிட வம்பு பொழிந்தடு குஞ்சர மங்குலொடுங்
கொஞ்சு மிளங்கிளி யம்பரி யுந்திடு கொற்ற மதன்றினமும்
வெங்கதிர் தங்கிர தங்கொ டடம்பரி மென்குலை தங்கிளநீர்
விழவிடர் தலினள றெழுமறு கதனிலொர் விற்கழை கொண்டுலவுஞ்
சங்கநெடும்பணை தங்கிய கோட்டிய தாலோ தாலேலோ
சங்கொடு வெங்கதை தங்கிய செங்கர தாலோ தாலேலோ. (௭)

குஞ்சர நின்று சரண்சர ணென்றிடர் கொண்டுழல் கஞ்சமலர்க்
குளிர்தட மணுகிவன் முதலையி னுயிர்கவர் கொற்றவ விற்கமழு
மஞ்சு மலர்க்கணை கொண்ட மதன்றனை யன்றரு ளிந்திரையி
னழகு பெறுந்தவ விடையர் தருந்திரு வனையவர் கொஞ்சியிடும்
பஞ்சர மென்கிளி மங்கையர் கொங்கை படுஞ்சிறு மென்கரசெம்
பருமணி யொளிதிக ழரவினன் முடிமிசை பரத நடம்புரியுஞ்
சஞ்சல மென்ப தொழிந்திடு கோட்டிய தாலோ தாலேலோ
சங்கொடு வெங்கதை தங்கிய செங்கர தாலோ தாலேலோ. (௮)

மண்டலமும்பல வண்டமு முண்டுமிழ் வாயா தாலேலோ
மங்குலு றங்குழன் மங்கைவதிந்திடு மார்பா தாலேலோ
பண்டுல கந்தனில் வந்திடு கங்கைசொள் பாதா தாலேலோ
பைந்துகி றங்கிடை யங்குட மங்கையர் பாலா தாலேலோ
கண்டகர் வெந்தலை யம்பி னரிந்திடு காலா தாலேலோ
கஞ்சனை யுஞ்சம ரந்தனில் வென்றிடு காளாய் தாலேலோ
தண்டலை தங்கிய தண்டுள வந்திகழ் தாரா தாலோ
சங்கொடு வெங்கதை தங்கிய செங்கர தாலோ தாலேலோ. (௯)

வேறு.

மீன வுருக்கொண் டார்கலி யுற்றாய் தாலோ தாலேலோ
வேத மனைத்தும் போத வளித்தாய் தாலோ தாலேலோ
கானமுழக்கும் வேயிதழ் வைத்தாய் தாலோ தாலேலோ
காத லனைத்தந் தார்புவி பெற்றாய் தாலோ தாலேலோ
ஆனை யழைக்கு மூலபரத்தாய் தாலோ தாலேலோ
ஆழியனைத்துங் கோல்கொடு சுட்டாய் தாலோ தாலேலோ
தானவ ருட்கும் மாழி தரித்தாய் தாலோ தாலேலோ
தாம வனக்கொந் தேறு புயத்தாய் தாலோ தாலேலோ. (௧௦)

## ௪-வது சப்பாணிப்பருவம்.

ககன மடங்கிட நின்று வளர்ந்தவர் கனபட லங்கள் கலைந்திட
வந்திடு, கருட னிரும்பணி கொண்டவர் கொந்தலர் கட்டுள வத்த
ரர், கமல மடந்தை புணர்ந்திடு திண்புயர் கலைதெரி யந்தணர் சிந்தை
யுறைந்தவர், கபடன் விடும்பரி வெங்கரி கொன்றவர் கட்செவி நற்ப
யர், மகபதி வெஞ்சின மிஞ்ச விடுங்கனன் மழைமலை கொண்டு
ந்தவ ரண்டர்த, மகளிர் நறுந்துகில் கொண்டு மறைந்தவர் மட்டு ம
ர்ப்பாதர், மறையவ னண்டமு முண்டுமிழ் கின்றவர் மதிதரு தண்
ட லின்க ணுறைந்தவர் மதமலை யின்பகை யன்று தடிந்தவர் வட்ட
மணித்தேனை, யகலிட மஞ்ச விடுப்பொழு தங்கர்த மரசன் விடுங்
டு விஞ்சி யழன்றிடு, மரவ நெடுங்கணை பொங்கி வரும்பொழு தட்ட
திசைப்பால, ரகமெய் நடுங்கி யொடுங்கி வணங்கிடு மளவிலொர் ப
குன னுய்ந்திட வன்றரு, ளரசர் குலந்தனில் வந்தவர் கஞ்சனை யட்
டவர் நட்பாகக், குகனுறை யுந்துறை வந்தரு டந்தவர் கொடுவரி
ங்கு வனங்கள் கடந்தவர், குறுமுனி தந்த நெடுஞ்சிலை கொண்டவ
கொட்டுக சப்பாணி, குரைகட லம்பையொ ரம்பினி லுண்டவர் கு
லகிரு தன்சிர முந்துணி கண்டவர், கொடிய புயங்க நடம்புரி கின்
வர் கொட்டுக சப்பாணி. (க

வேறு.

கொங்குலவு சண்பக நறும்பொழி லடைந்திளங் கோகிலத் தி
சைபாடியுங், குளிர்பெருங் கானத்து மயிலினுட னுடியுங் கொய்ம்ம
ர்க் காளிந்தியிற், றங்குமலை மென்புனலி னிடைகுடைந் தாடியுந் த
ளிர்பற்றி முலையொத்தியுந், தளருமிடை துவளத் திணிந்த பந்தாடி
யுந் தனுவருந் திடைமாதரார், தெங்கவிர் குரும்பைநிகர் துங்கநகி
பற்றியுஞ் செறிகுழற் புயல்பற்றியுந், திண்காழ் மணிக்குல முழங்குத
கில் பற்றியுஞ் செழுமலர்த் தார்பற்றியுஞ், சங்கணி தடங்கரம் வ
ந்துமொ ரிளங்குழவி சப்பாணி கொட்டியருளே, தண்டலை நிறை
துயரு மண்டர்பணி கோட்டியன் சப்பாணி கொட்டியருளே. (உ

கோளரா வுண்டுமிழு மதியொத்த வதனத்தர் குலவனப் பெ
டை நடையினர், குளிர்தடத் துலவுநத் தனமிடற் றினரிணைக் குவடி
னையனைத்த முலையார், நாளரு நறுமலர்க் கோதைசெறி பூங்குழலர்
கைமுல்லை யிடைமாதரார், நளினத் தடக்கை பற்றிக்குரவையயர்வு
று நரைகொளெழு விடைதழுவியு, நீளமால் வரைகொடு பயோததி
கடைந்தமுத நிறையமர ருக்குதவியும், நிட்டைபுரி யந்தணர் தம

கிடர் விளைத்துவரு நிருதர்மேற் கணைதொடுத்துந், தாள தாமரை ம
லர்க் கையிணை சிவக்குமுகில் சப்பாணி கொட்டியருளே. தண்டலை
நிறைந்துயரு மண்டர்பணி கோட்டியன் சப்பாணி கொட்டியருளே.

கள்ளொழுகி மகரந்த முஞ்சிந்தி யஞ்சிறைக் களியளி குடைந்
துபாடக், கதிர்மதி வருங்கங்குன் மலர்குமுத மொத்தசெங் கனிவா
ய் வெளுப்பவெகினப், புள்ளொழுகு நளினச் செழும்பூ வமிழ்ந்திடப்
புனல்குடையு மிடைமாதரார், புனைநறுந் துகில்கவர்ந் துயர்கடம்பி
வர்கரும் புயனிறம் பெறுகுழவியே, தெள்ளமுத மமருக் குதவிப்பி
னண்டர்தஞ் சேரியிற் சிதர்தூங்கிடுந், திரளும்வெண் ணெய்க் கழுதி
னுக்கிழுதி னுக்கழுது திரியுமன் றயரியக்கர், தள்ளருந் துயர்தவிர்
த் தருண்மலர்ச் சரணநீ சப்பாணி கொட்டியருளே, தண்டலை நிறை
ந்துயரு மண்டர்பணி கோட்டியன் சப்பாணிகொட்டி யருளே. (௪)

அமரா வதிக்கிறைவ னறுகான் முழக்குமத வயிரா வதக்களி
றெடு, மருகோட மிக்ககன யமராச னுட்கநிதி யளகாபு ரிக்கிறைவ
னொ, டமராடி வெற்றிமலர் புனைராவ ணப்பதக னடலார் முடித்தலை
யெலா, மறவாளி தொட்டவரி சிலைராக வக்குரிசி லலையார் கடற்புவி
யில்வாழ், தமரான வர்க்குதவு பததாம ரைப்புலவ சதுமா மறைக்கி
ழவவென், றமிழ்மாலை யைத்துளவ மணமாலை யிற்கருது தடமார்ப
மொய்த்தளியினஞ், சமராட நெய்த்தகுழன் மலர்மா மகட்கிறைவ ச
ப்பாணி கொட்டியருளே, தளர்வோ டழைத்தகரி யிடர்தீர் தரச்செ
ய்முகில் சப்பாணி கொட்டியருளே. (௫)

வேறு.

செம்பொறி வண்டு துதைந்து முழங்கிடு செழுமலர் வாவிதொ
றுஞ், செறிமடி தனிலிற வுகள்தலி னொழுகிய திண்கவ ரிச்சுதையு
ண், டம்பவி ழுங்கம லந்தனி லுந்துறு மனநிரை கண்டுயில, வங்கய
றங்கு தடங்கண் மடந்தைய ரணிமணி புடைநெகிழ, வம்பவி ழுங்கு
ழன் மக்குல் கலைந்திட வளர்முலை யிணைவரையால், வகிரிழை பொரு
மிடை யொடியக் குடைதரு மாண்பமை மாவினறுங்,கொம்பி னிளங்
குயி றங்கிய கோட்டிய கொட்டுக சப்பாணி, கொட்டு நறைத்துளவு
ற்ற புயப்புயல் கொட்டுக சப்பாணி. (௬)

கஞ்ச முகங்குவி மங்கை படுந்துயர் கண்டவைகண்டிடமென்
கலைபல வரையினி னிலவுற வுதவிய கருணை நெடுங்கடலே
மஞ்சு முகந்தெறி சண்ட நெடுந்துளி மறைபட வரையினிறீஇ
வண்டணெடும்புன றங்கு மடந்தையர் வனைதுகில் கவர்மதலாய்

நஞ்சு முகந்தெறி யும்ப ணெடும்பட நாக மிசைத்துயில்கூர்
நந்தம ருங்கர பங்கய பங்கய நாப மதம்பொழியுங்
குஞ்சர பந்தி தடந்திகழ் கோட்டிய கொட்டுக சப்பாணி
கொட்டு நறைத்துள வுற்ற புயப்புயல் கொட்டுக சப்பாணி. (எ)

வண்டமர் கொன்றை யலங்கல் புனைந்தவன் வந்து பொரும்பொழு
வாண னெடும்புய மாயிர முங்கொய்து வாகை புனைந்தவனே [தும்
தண்ட தரன்பொர வஞ்சிடு வெஞ்சமர் தந்திடு கும்பகனன்
றலையுரு ளக்கணை கொடுகட லிட்டிடு தசரத புத்திரனே
பண்டமர் தந்திடு மண்டலை வென்றுயர் பதிகொளு மவுணனெகப்
பாத மதைச்சிர மீது பதித்தொரு பாதல மிட்டவனே
கொண்ட லுறங்கு கதம்ப வனத்திறை கொட்டுக சப்பாணி
கொட்டு நறைத்துள வுற்ற புயப்புயல் கொட்டுக சப்பாணி. (அ)

மந்திர வேள்வி புரிந்து கதம்ப வனத்தினி னித்தமும்வாழ்
மாதவர் பான்மறை யோதிய பூவையும் வண்ண நறுங்கிளியுஞ்
செந்துவர் வாய்மட மங்கையர் முன்கை செறிந்தவர் கொஞ்சிடுமென்
செஞ்சொலை யேபயில் கின்ற வளங்கொள் செழுங்குழு மாநகரி
லிந்திர னுதிய வந்தர மேவுந ரெண்டிசை யும்பெருகி
யிங்கித மாதரொ டிந்திரை நாயக வென்று தினந்தினமுங்
கொந்தலர் பூமழை சிந்த வுவந்தவ கொட்டுக சப்பாணி
கொட்டு நறைத்துள வுற்ற புயப்புயல் கொட்டுக சப்பாணி. (கூ)

வேறு.

கடமதி லுறுமமு தத்தை நிகர்த்த மொழிப்பூவை
களியளி குமுறு மலர்க்கணி வைத்த குழற்பாவை
கடிகமழ் கமல மலர்த்திரு வைத்தரு வைக்கோலக்
கலைமதி தனையரு ளத்தி யிடைத்துயின் மைக்கோலா
குடவமு தளைதரு கொச்சை யிடைச்சியர் மெய்ப்பாலா
குறையறு பகிரதி யுற்று மணக்கு மலர்ப்பாதா
மடலவிழ் துளப யணிப்புய கொட்டுக சப்பாணி
மரகத மழைமுகி லொத்தவ கொட்டுக சப்பாணி. (க0)

---

## ரு-வது. முத்தப்பருவம்.

தடக்குஞ் சரத்தின் மதநதியுந் தழைத்த சுவல்வெண் பரிநு
ரையுந், தாங்கக் கடலிற் பெருக்கெடுக்குந் தடமா மறுகும் புவியி

ளிடை, வெடிக்கும் பலவின் குடக்கனியை விரலா னெகிழ்த்துக் கவிக்குலங்கள், விரைமென் சுளைக ளருந்தமந்தி வெடுக்கென் றடர்த்துப் பறித்துவிண்ணைக், கடக்குஞ் சினைமா மரமிவரக் கனிக ளுதிர்த்து வழிநறையாற், கழனி நிறையும் பசுஞ்சாலிக் கதிர்கள் விளையச் சினவாளை, முடக்குந் தடமுஞ் செறிகோட்டி முதல்வா முத்தந் தருகவே, முத்தர்க் கரிய கதியளிக்கு முத்தே முத்தந் தருகவே. (க)

பொன்னாட் டவரும் புகழ்ந்தேத்தப் புதுமென் கமலத் திடையிருந்து, புவனம் படைத்தோன் சதுமறையாற் புகன்றேத் தெடுப்பக் குளிர்கானிற்,பன்னாட் டவஞ்செய் முனிவரொரு பானின் றிறைஞ்சி யேத்தியிடப், பாகீ ரதிப்பைம் புனலாட்டும் பதத்தா மனைபினிணைவருந்தக், கன்னாட் டியநோட் சகடுதைத்துக் கடுவாழரவின் முடிநடிக்குங், கண்ணா விடையர் மடமகளிர் களிக்கு மமுதே குலக்கொழுந்தே, முன்னாட் டவமே யெனவணைக்கு முன்னோன் முத்தந்தருகவே, முத்தர்க் கரிய கதியளிக்கு முத்தே முத்தந் தருகவே. (உ)

கோலத் துருவா யிரணியக்கட் கொடுந்தா னவனைக் கொன் றுலகைக்
குலவு மருப்பிற் கொணர்ந்தருளுங் குழவிப் புயலே மறைபுகலு
மாலத் துரக னுடலிடத்து மரங்கத் திடத்து மெமதகத்து
மண்டத் துள்ளும் புறத்துமுறை யரசே சினந்து வருமால
காலத் துருவாம் பேய்முலைப்பால் களிப்புற் றருந்தி யாருயிருங்
கலந்து பருகும் பெரும்பேறே கண்ணே கண்ணி னொளிர்மணியே
மூலத் துருவே திருக்கோட்டி முகுந்தா முத்தந் தருகவே
முத்தர்க் கரிய கதியளிக்கு முத்தே முத்தந் தருகவே. (ங)

மகரக் கடலைக் கலக்கிவரு மதுகை டவரா ருயிர்பறித்து
மலிமே தையையிப் புவிநிறைக்கும் வாழ்வே யதலத் தரவமஞ்சும்
விகிரத் ததிபன் மணிப்புயத்தின் மிசைவந் துலக மதிக்கமத
வேழத் ததிப னழைத்தசதுர் வேதப் பொருளே முளரியில்வாழ்
சிகரக் கனக முலைமடமான் றிருமா மகடன் னிணைவிழியிற்
றிகழுங் கரிய மாமணியே செறியுங் கலைகொண் முழுமதிமா
முகரத் தினமே கனித்திருவாய் முறுவன் முத்தந் தருகவே
முத்தர்க் கரிய கதியளிக்கு முத்தே முத்தந் தருகவே. (ச)

தேவ ருலகிற் புகுந்துறையுஞ் சிந்தா மணியு நின்மார்பிற்
றிகழு மணியாங் கவுத்துபமுஞ் செய்ய பரிதி தரப்பெற்ற

கோவின் மணியாஞ் சமந்தகமுங் குலமால் வளைவாழ் வேயீன்ற
குருமா மணியுந் திருநாபி குளிரப் பூத்த செழுங்கமலப்
பூவின் மருவுந் திருமணியும் பொருவா திகத்தொ டானந்த
போக மருளு முன்குமுதப் போதுந் துகிரு மொருகருங்கொண்
மூவின் மலர்ந்த தெனுங்கனிவாய் முறுவன் முத்தந் தருகவே
முத்தர்க் கரிய கதியளிக்கு முத்தே முத்தந் தருகவே. (

வே று.

வாதாடி யஞ்சிறை மடப்பெடைக் கருவண்டு மதுகரத் தொ
மடுப்ப, வழியுநறை புனல்பாயு மடையுடைத் துச்சாலி வயனிறை
தாறுபாயப், போதாடு பைம்பொழிற் பூகநிரை சுற்றுபொற் பூங்க
வணத்தினிழலிற், புனையிழை மடந்தையரி னிமயி னடித்திடப் பூ
வைபைங் கிளியினோடு, மீதாடு கோகில மிழற்றுமிசை கேட்டுருகி
வேட்கையள வாறிதரும், விதரணப் புரவல ரெனக்கொன்றை
பொன்சொரியும் வியனுடை விபுலையென்னுங், காதாடு பொற்குழை ம
டந்தைதிரு மணவாள கனிவாயின் முத்தமருளே, கம்பக் கரிக்குத
வு செப்பொற் பதத்திறைவ கனிவாயின் முத்தமருளே. (சு)

பண்ணூர்ந்த கிளிமொழி மடந்தையர் குடைந்தாடு பைம்புனலி
டைத்தாழையின், பழநெக் குதிர்ந்திடச் சினவரால் குதிகொண்டு
பாளைவிரி பூகங்கிழித், தண்ணூர்ந்த தெங்கினிள நீருடைத் தப்புறத்
தயலிழியு முகில்வயிறுகீண், டவிர்மதிக் கலைகிழித் தைந்தருவி னளி
மூசு மம்பொற் பராகமளவி, விண்ணூர்ந்த வியனதி கலக்கியய னுல
கத்தின் மேற்றாவி யண்டமுகடும், வெடிபடக் கீண்டிழி புறக்கடற்
புனலினொடு மீண்டுபணை யிற்றுயில்வுறுங், கண்ணூர்ந்த பூம்பொழிற்
கோட்டிவள நாடநின் கனிவாயின் முத்தமருளே, கம்பக் கரிக்குத
வு செம்பொற் பதத்திறைவ கனிவாயின் முத்தமருளே. (எ)

வே று.

கம்பக் கரடக் கவளக் கரியைக் கவனப் பரிமாவைக்
கஞ்சன் விடுத்திட வந்து சுழற்றிடு காலைச் சாலவுநீள்
கும்பக் களபக் கொங்கை யொடுஞ்சதி கொண்டுறு பூதனையைக்
குருகைப் பதறிக் கதறிச் சுழலக் கொலைபுரி திருமதலாய்
விம்பக் கிரணத் தருணப் பரிதியின் வெயிலொடு நிலவிரியும்
விரியுஞ் சிறையுங் களமுங் கொடுவரு விகிரத் ததிபதிதன்
மொய்ம்பிற் றிகழ்தரு மும்பர்க் கதிபதி முத்த மளித்தருளே
முளரியில் வருமொரு திருமகண் மணமகன் முத்த மளித்தருளே. ()

கண்டக னெஞ்சு கலங்கிட வுஞ்சிறு காதல னுய்ந்திடவுங்
கம்பம திற்பொலி நம்பர மெய்த்தவர் கண்ட கருப்பொருளே
விண்டல வெண்சசி தங்க நிவந்துயர் மேருவின் மும்மடியும்
வெயில்விரி யுஞ்சுடர் பரிதிவி ழுங்கு விமானத் தளியுறைவோ
யண்டமு மெண்டிசை யுங்கட லுங்கிரி யட்டமு மட்டவிழ்தா
ரந்தண னும்பல ரும்புவ னங்க ளனைத்தும் பெருகவெரு
முண்டக நாபி மலர்ந்திடு கோட்டியன் முத்த மளித்தருளே
முளரியில் வருமொரு திருமகண் மணமகன் முத்தம ளித்தருளே. ()

நித்தில மிட்டொளி விட்டவிர் சுட்டியு நெற்றியி னின்றாட
நிறைதரு கிண்கிணி கலகலெ னுங்தொனி நேர்ந்திரு பதமாடத்
தத்து மெழிற்குல வச்சிர மிழைத்த சதங்கை தழைந்தாடச்
சத்த மறைப்பொரு ளிற்குல வுற்றிரு தண்டை கலந்தாட
வித்துரு மத்தொளிர் கற்பக வத்த விரற்பணி யொளிவிரிய
விளைநில வுமிழ்தரு குறுநகை யழகெழ மெய்த்து நடம்புரியு
முத்தமிழ் மாமறை மொய்த்திடு கோட்டியன் முத்தம ளித்தருளே
முளரியில் வருமொரு திருமகண் மணமகன் முத்தம ளித்தருளே. ()



## சு-வது. வாரானைப் பருவம்.

தேடுமறையு மதன்முடிவுந் தெளிவுற்றெளிதிற் காண்பரிதாந்
தெய்வக்கொழுந்தே கற்பகத்தின் செழுந்தாதளைந்து சிறைக்களிவண்
டாடுங்குழற்பொற் றிருமடமா னவனிமடமா னிவர்களிக்கு
மமுதின்சுவையே யுலகழிக்கு மசுரன்பொருட்டா யமரர்வந்து
கூடுந்திருக்கோட்டியி லனந்தன் குளிர்மெய் யணையிற் கண்டுயிலுங்
குணவா ரிதியே மரகதப்பூங் கொம்பி னெசிந்து முலைதாங்கி
வாடுங் கொடிநுண் ணுசுப்பிடையர் மடவார்க் கணியேவருகவே
மணிகொள்கரிய மழைமுகிலின் வண்ணா வருக வருகவே. (க)

கட்டு விரியுஞ் செழுங்கமலக் கண்ணா கடைந்த கடத்துவெண்ணெய்
காணு தருந்திக் களித்திருக்குங் கருணா நிதியே கதிரினொளி
விட்டு விரியுஞ் செழுமணிப்பூண் விரகக் களபப் பொம்மன்முலை [ற்
வேட்கையிடையர் மடமகளிர் விரும்புங் கரும்பே விளங்குசெம்பொ
பட்டு விரியுஞ் சிறுமருங்குற் பாவை யசோதை கண்டுளித்துப்
பார்த்து மகிழக் களிப்புகல்கும் பருவ மதியே பசுந்துளவின்

மட்டு விரியுந் திருநெடுந்தோண் மழலைப் புதல்வா வருகவே
மணிகொள் கரிய மழைமுகிலின் வண்ணா வருக வருகவே. (உ)

வேதந் தெரிந்து வேதாந்த மெய்ம்மை யுணர்ந்து நல்வினைதீ
வினையைக் கடந்தார் மதிப்புலத்து விளையும் பயனே மெய்யறியார்
போதங் கடந்து புலன்கடந்து புவனங் கடந்து பிரமாண்டப்
புறத்துத் திருநா டுவந்திருக்கும் பொருவின் மணியே பொய்யாம்பல்
பேதங்கடந்த மெய்யடியார் பிறப்பைக் கடந்துன் னிடைக்கடையில்
பிரமா நந்தந் திளைத்திருக்கப் பெருக்கு முகிலே பிணங்கியிடு
வாதங் கடந்தார் தொழற்குரிய வாழ்வே வருக வருகவே
மணிகொள் கரிய மழைமுகிலின் வண்ணா வருக வருகவே. (ஙு)

மெய்யே வருக முழுஞான விளக்கே வருக வருமறையின்
வித்தே வருக நளினமின்னாள் விரகா வருக மதனனுக்கு
மையே வருக வரவணைகொ ளமலா வருக வடியவருக்
கன்பே வருக மணியணியு மழகே வருக கபடியர்க்குப்
பொய்யே வருக நந்தனுக்குப் புதல்வா வருக வெங்குறிறை
பொருளே வருக விணையில்செழும் பொன்னே வருக நேமியுண்ட
மையே வருக விதேகன்மகிழ் மருகா வருக வருகவே
மலர்க்கா மருவுந் திருக்கோட்டி மன்னன் வருக வருகவே. (சு)

முத்தன் வருக விபமழைத்த மூலன் வருக முனிவர்தொழு
முகுந்தன் வருக வனைத்தினும்வாழ் முராரி வருக முளரியினை
னத்தன் வருக விலக்குவற்கு மன்னன் வருக முழுக்கருணை
யாளன் வருக வுலகளிக்கு மன்னை வருக வடத்திலமர்
நித்தன் வருக நிலமடந்தை நேயன்வருக முதுமறைசொ
னிமலன் வருக வுலகளந்த நெடியோன் வருக களிறடர்த்த
மத்தன் வருக தேவகிதன் மழலைப் புதல்வன் வருகவே
மலர்க்கா மருவுந் திருக்கோட்டி மன்னன் வருகவருகவே. (ரு)

வேறு.

தாளதா மரையுந்தி வந்ததப் பூவினுறை சதுமுகப் பிரம னண்டந், தந்தன னதிற்பல சராசர மமைத்தனன் றண்கடற் புனன்மடுத்த, காளமா முகிலொத்த படிவநீ யெங்குங் கலந்துநிறை கின்றனையெலாங், காத்தழிப்பாய் மறைப்பா யருளுவாய் பின்புகனவயிற் றிடையடக்கி, மீளவும் விடுத்திடுவை யிவையெலா நின்சிறிய விளை

பாடலாகுமன்றி, வேதத்தி னுட்பொருளு நீமுடிவு நீயலது வேறு தெய்வங்க ளுளவோ, நீளத்தி லலகின்ற மதியிலேற் கருள்புரிய நிமலநாரணன் வருகவே, நேயமாய் வருமலகை யாவியோ டமுதுறுகர் நீலமால்வனை வருகவே. (சு)

கஞ்சவான் மடுவின்முத லென்றகரி வாசகங் காசினிமுதற் ககனம்வாழ், கடவுளர் செவித்துளை புகுந்துளது முன்வந்துகாத்தவனு மாகுமாற், பஞ்சணி பதத்தெரிவை பாஞ்சாலி யவையிற் படுந்துயர மகலநின்பொற், பாதமாம் போதுதுணை யென்ன மாயாத்துகில் படைக்கவருள் செய்தவனுநீ, தஞ்சமென வந்தவடி யர்க்கருள்புரிந்திடுந் தற்பரனுநீ சதுமறைத், தலைவனீ யுலகநீ தவமுநீ தருமநீ தத்துவமுநீ தகவுளோர், நெஞ்சி னிலவுற்ற பொருணீ திருக்கோட்டி வாழ்நிமல நாரணன் வருகவே, நேயமாய் வருமலகை யாவியோ டமுதுறுகர் நீலமால்வனை வருகவே. (எ)

காராடு பொழிலிற் கலந்தாடி மதுவுண்டு கருவண்டு குடிகொண்டுவாழ், கமலச் செழுந்தா தளைந்தஞ் சிறைத்தும்பி காமுற்று விளரிபாடிச், சீராடு கங்கைப் பெருக்கெடுத் தலையினொடு திகழ்பொங்குதென் னருவியிற், றிருமங்கை யெனவங்கு வருதெய்வ மகளிரொடுதேவரும் பூவினுறையுங்,கூராடுமிணைவிழி மடந்தையரு மங்கைதொடு குமரரும் பழுதிலாத, கோமுனிவரும் பிரம மாமுனி வருங்கைகுவித்துச் செபித்து மனுவா,னீராடி வெம்பவ மகற்றுந் திருக்கோட்டி நிமலநாரணன் வருகவே, நேயமாய் வருமலகை யாவியோ டமுதுறுகர் நீலமால்வனை வருகவே, (அ)

வேறு.

வஞ்சனை யால்வரு நஞ்சனை யாருயிர் மாய்த்துக் கோவலர் சேர்
வனநின் றழலுங் கனலை விழுங்கிய மாதவ சீதரனே
கஞ்சனை யார்வமி னெஞ்சனை யன்று கடிந்து தொடர்ந்துவருங்
கண்டக ராவி கலங்க மலைந்திடு காம ரிளம்புதல்வா
அஞ்சனை யார்தரு மஞ்சனை யூர்தரு மந்தண காகம்வெரூஉ
மண்டச வாகன மண்டல மோகன வண்டர் சிகாமணியே
மஞ்சனை யாய்மல ரங்கனை நாயக வந்தருள் வந்தருளே
மல்லை மடித்தொரு வில்லை யொடித்தவன் வந்தருள் வந்தருளே. ()

கொங்கை யிலங்க வடங்க ளணிந்திருள் குந்தள பந்திதொறுங்
குலமல ரணிபுனை யிடையர் மகளிரொடு குரவை நடம்புரிவோய்
சங்கு முழங்கு தடங்களி னின்றுயர் தாமரை மாமலரிற்
றங்கு மனந்துயில் கொண்டிட வண்டுகள் தாலம் பாடியிடக்
கொங்குல வுஞ்சிறு சண்பக மும்படர் கோங்கின முஞ்செறியுங்
குளிர்பொழில் சுலவிய பெருவள நிறைதரு கோட்டித் திருநகரில்
மங்குல் கடிந்த விமான முகந்தவன் வந்தருள் வந்தருளே
மல்லை மடித்தொரு வில்லை யொடித்தவன் வந்தருள் வந்தருளே. ()



## எ-வது அம்புலிப்பருவம்.

மண்டமுத வாரிதி யுறைந்துதிரு மாதினொடு வந்தனை யெனக்குறித்தோ, மற்றவண் முகத்தையொரு சிறிதொத் திவன்கமல மலர்விழியி னென்றுகநீ, பண்டிவன் மனத்திடை யுதித்தது குறித்தோ பழம்பொரு ளிவன்போலநீ, பான்மைபெறு புலவருக் கமுதீவ தெண்ணியோ பல்கலை விளக்கியிடுநீ, விண்டலத் துறைமான மேலுறவு தோர்ந்தோ விரிஞ்சன் புராரிமுதல, வேறுவே றுருவாகி பொன்றாகி யருவாகி வேதமுத லீறுகாணு, வண்டருக் கதிபனுனை வாவென் றழைத்தன னம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுபி னுமிழ்ந்திடுங் கோட்டியனொ டம்புலீ யாடவாவே. (க)

நஞ்சம்பி லிற்றுபகு வாயரவின் வாய்ப்பட்டு நாடோறு மிகவுழலுவாய், நல்வினை யிலார்பெருஞ் செல்வமென வேகலைக ணாளுக்கு நாட்குறைகுவாய், கஞ்சக் கிழத்தியை வருத்தவது கண்டவவள் காந்தன் கரத்தின் மெலிவாய், கடவுளர் சுவைத்தெறிய வேறுசெய லின்றியே கதிர்மண்டலத் தொளிப்பாய், விஞ்சுஞ் சடாடவி வியன்கங்கை யரன்முடியில் வீற்றிருந் தாலுநின்மெய், விளைபாண்டு கயமுன்னை விடுவதிலை கூனிமிரும் வினையுமிலை யிவணடைதியே, லஞ்சலென் றொருசொலே யமைபுமிவை தீர்தரற் கம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுபி னுமிழ்ந்திடுங் கோட்டியனொ டம்புலீ யாடவாவே.

திண்ணிய மகாமேரு வரையெனத் திகழுமுயர் சிஞ்சுமா ரத்தின்வாலிற், றிரியெங் கிரத்தினிற் சிறுவனுந் துருவன்கை சிக்கிக்கிடந்து சுழல்வாய், விண்ணிற் பறந்துமக மேருவலம் வந்துமவ வியன்கங்கை தனின்மூழ்கியும், விஞ்சைசொற் றநளுநின் குரவன் பெருஞ்சாபம் விட்டதிலை யிவையனைத்து, மெண்ணிற் களங்கியாய் நனைதி

ாயு முடையனு வேந்திழைய ரிகழகிற்பா, யிப்பெரும் பிழையனைத் தந் தீர வமயமிது வெந்தைவா வென்றபொழுதே, அண்ணற் கரும் கனி றடற்கோ டொசித்தவனெ டம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுபி னுமிழ்ந்திடுங் கோட்டியனெ டம்புலீ யாடவாவே. (௩)

நிலைபெற்ற வானுலக முடியிற் சிகாமணி நிகர்த்தெனத் தருபனைநிதீஇ, நிகரில் செங்கோன்மையுந் தலைமையுந் தந்தவனை நித்யமுற வைத்தவனிவன், சிலைபெற்ற பசியமண் ணுண்டையாற் கூனிகூன் றீரவெய்தா னிதுவலாற், றிகழ்கஞ்ச னூர்புக்க போதுமொரு மங்கைகூன் றீர்த்ததுண் டிவணைடைதியேல், விலைபெற்ற செம்பொன் விமானமுண் டென்றுமதில் வீற்றிருப்பாய் நீமுனம், விழைதிருப் பாற்கடலு முண்டதில் வசிக்கலா மேன்மையுள கூன்றவிர்ப்பா, மலைபெற்ற கடலாடை யவனிமகள் கொழுநனெ டம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுபி னுமிழ்ந்திடுங் கோட்டியனெ டம்புலீ யாடவாவே. (௪)

நிறைசிதியு மொளியும் படைத்தபே ரவைகுறையு நிலையுறுவரேற்றமக்கு, நிகரான மித்திர ரிடைச்சென் றிரத்தலதி நிந்தை யவமான மதுபோற், குறைவுற்ற கலையனுக் கொஞ்சமதி யாகிக் கொடுங் கதிர்ச் செல்வனண்பு, கூடலு மிரத்தலுங் கூடா பெருந்திருக் கோமா னழைத்த பொழுதே, யிறையினித் தாழ்த்தறக வன்றிவண் வருதியே லெக்குறையு மில்லைவேண்டி, னிந்த்ரபட் டமுமீவ னதுசிறிதெனிற் பிரம னிறைமையும் பெறுவைகண்டா, யறையுந் திரைத் திருப் பாற்கடற் கிறைவனெ டம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுபி னுமிழ்ந்திடுங் கோட்டியனெ டம்புலீ யாடவாவே. (௫)

மந்தரங் கொடுகடல் கடைந்தநாட் டறியாய் வதிந்தகியமுக்காற்றினல், வாளரவி னுக்குமொரு கோளிழைத் தாயதனை மதனமோகன மங்கையார், கந்தரத் தினையரிந் தாரக் கருங்கோள் கடுஞ்சினங் கொண்டு நின்னைக், கவர்தலும் விடுத்தலும் புரியுமிதி லென்றுநீ கவலையுறுவது தவிர்ப்பான், சுந்தரத் திருமுக மடந்தை வடிவானவத் தோன்றலே வாவென்றிடத், தொல்லறம் பலவியற் றினைபோலு மிலவெனிற் றெழுதற்கு மரிதுகண்டா, யந்தரத் தவர்பணியு மிந்திரா மணாளனெ டம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுபி னுமிழ்ந்திடுங் கோட்டியனெ டம்புலீ யாடவாவே. (௬)

தாதளைந் தினவண்டு குடிகொண்ட பைந்துழாய்த் தாமம் பு
ந்துபதின்மர், தமிழ்மாலை யுந்தொண்டர் துதிமாலை யுங்கொண்டு
ணவி மணக்குந்திருப், பாதமலர் பற்றுபர மானந்த யோகியர்கள்
குவம துற்றநாளிற், பானு மண்டலமுந் துளைத்திடுவர் நின்னுட
பாரமும் பகிர்வர்கண்டா, யீதறிந் தப்பதவி சேர்துமெனி லயனுக்
மெட்டா துனக்குவசமோ, வேழைமதி யாதனல னன்றுலக மே
ற்கு மீசன்வா வென்றபொழுதே, யாதியம் பரனீயு மூதியம் பெ
லாகு மம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுமி ழுமிழ்ந்திடு
கோட்டியனெ டம்புலீ யாடவாவே. (எ

படிபடு பெரும்பொறை சுமக்கலாற் றுதுதளர் பார்மகண் மு
காற்றிடப், பாரதப் போர்முடிப்பான் கொடுந் திகிரியாற் பகலையு
மிரவாக்கினன், முடிபடு சிரத்தரசர் முனைசாய வெங்கள முதற்ப
கிடுமுகூர்த்த, முன்றின மெனப்பிற்றை நாட்சேரு முனையிரவி மு
ல்வனொடு கூடவைத்தான், கொடிபடு நுசுப்பிள மடந்தையா யுலை
யொத்த கோளையிரு கூறுக்கினன், குளிருமிள நிலவுமிழு முனையு
னி வுறினிருட் கோளாக்கலுங் கூடுமா, லடிபடுந் திருமுரச மார்க்கு
மதுரைக்கிறையொ டம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுமி
மிழ்ந்திடுங் கோட்டியனெ டம்புலீ யாடவாவே. (அ

கம்பக் கடக்களி றடர்த்தவெங் காவலன் கடல்கடைந் திட்ட
ந்நாட், கமடமாய் வரைகொண்டு கபடமா யசுரரைக் கன்னியா
மாய்த்ததுமலாற், கும்பத்தி டைச்சுதை கொணர்ந்துமை யளித்
வக் கோமான் பெருங்கருணையாற், கொட்டு மமிர்தக்கலை படை
தனை யவன்பிரபை கொண்டொளி விளைத்தல்பெற்றாய், தம்பத்
தித்திளங் குழவியை வருத்திடுந் தமனியன் குடர்களைந்த, சக்ரப
யுக்ரபதி வாவென் றழைத்திடத் தாழ்த்தறக வன்றுகண்டா, ய
பொத்த செங்கனர விந்தைமண வாளனே டம்புலீ யாடவாவே
அண்டமுழு துண்டுமி ழுமிழ்ந்திடுங் கோட்டியனெ டம்புலீ யாட
வாவே. (கூ

பண்டிலங் காபுரிக் கதிபன் கொடுங்கோன்மை படிமுழுது போ
வவிந்த்ரன், பதிவிட்டதும் புநட வாகனன் புட்பகம் பறிபட்டது
பரிதியின், மண்டிலம் விலங்கிடுந் தன்மையுங் கண்டவன் மடந்தை
ர்க் காடியாகி. வைகுநீ போவெனப் போகிப்பின் வாவென்ன வந்
து மறந்தனைகொலோ, சண்டகோ தண்டக் கொடுங்கணையி னலவன்

சிரம் விழத்துணித்த, தாசரதி ராமனுனை வாவென் றழைத்திடத்
ட்டநின் வசமாகுமோ, அண்டிலே யெனிற்றண்ட முறல்சரத மாத
ா லம்புலீ யாடவாவே, அண்டமுழு துண்டுபி னுமிழ்ந்திடுங் கோ
டியனொ டம்புலீ யாடவாவே. (கo)

---

## அ - வது சிற்றிற்பருவம்.

குன்றே யனைய புயமுடைச்செங் கோற்கோ சலர்கோ னளித்
குலக், கொழுந்தே மதில்சூ ழயோத்திநகர்க் கொடிமா மறுகிற்
கொடிஞ்சிநெடும், மென்றே ருருட்டிச் சிறுவரொடும் விரும்பி விளை
ாட் டயருமணி, விளக்கே சிறைமென் புள்ளிருக்கும் விரைப்பூம்
பொழிலின் முசுக்கலைகள், வன்றாட் டருவினெடுஞ் சினையில் வளரு
மதியி னிறால்கிழிந்து, வழிதே னருந்தப் பெடையினொடு மதுப
மருந்திக் களிப்பினொடு, தென்றேர் கோட்டித் திருநகரச் செல்வா
ற்றில் சிதையேலே, தெய்வத் திருநான் மறைபுகலுந் தேவே சிற்
றில் சிதையேலே. (க)

வில்லை யெடுத்து மந்தரைகூன் விடுக்கத் தொடுத்த வுண்டையினால்
வைகுண் டங் கவடான் கலைக்கவன மேவிக் கவந்த னுயிர்பறித்துக்
வில்லை நிகர்த்த புயச்சனகன் கன்னி தனக்காப் பின்றொடர்ந்து
கனக மடமா னுயிர்தொலைத்துக் கடலி னணைசெய் திலங்கையெய்தித்
தொல்லை யடுத்த வரன்கிரியைத் தோளா லெடுத்த பேராற்ற [வாச்
றொலைவி லரக்கன் முடித்தலைக டுணித்தோய் கருங்கல் பெண்ணுரு
செல்ல மிதித்த பொற்பதத்தாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே
தெய்வத் திருநான் மறைபுகலுந் தேவே சிற்றில் சிதையேலே. (உ)

ரிய கடலின் முகட்டெழுந்து கங்கு லறுக்குங் கிரணவொள்வாட்
திரின் குலங்கண் மிடைந்ததெனக் கனக முடிகள் பலவுடைத்தாய்
ரியும் விமானச் செழுஞ்சோதி விண்ணிற் புகுந்து விபுதர்திரு
வந்தன் கோயின் மணிவிளக்கா விளங்கக் கடம்ப வனமலர்ந்து
சொரியுந் திருக்கோட் டியிலனந்தன் சுடிகை மணியா யிரம்பரப்புந்
தூண்டா விளக்க மொளிர்சேக்கை துயிலும் பரம முத்தருக்கே
தெரியுந் துணைத்தா மரைப் பதத்தாற் சிறியேஞ் சிற்றில்சிதையேலே
தெய்வத் திருநான் மறைபுகலுந் தேவே சிற்றில் சிதையேலே. (ந)

திக்கும் வளைமுத் தருடிருப்பாற் சடலி னிடத்து மாமகத்திற்
ங்கை பெருகு நரசிங்கக் கருணைத் தடத்து மத்தினத்தில் [தும்
திக்குந் திருப்பட் டிகையினின்று விளையாட் டயரும் பெருந்தடத்

வேரி கொழித்து மலர்ந்தசெழு விரைமென் கமலம் பொருவியண்டர்
துதிக்குங் கதம்ப வனத்துறையுந் தூய முனிவன் மதிப்புலத்துங் [ங்
துணைக்கோ வியர்தங் குடிலிடத்துந் தோன்றி யடியார் தமையென்று
திதிக்கும் பதத்தாற் றிருக்கோட்டிச் செல்வா சிற்றில் சிதையேலே
தெய்வத் திருநான் மறைபுகலுந் தேவே சிற்றில் சிதையேலே. (ச)

பாணிப் புனலான் மாவலிபாற் படிமூன் றடியேற் றண்டமுறப்
படருந் திருவி க்ரமனென்னும் படிவ மெடுக்கு மக்கால
மாணிக் கமைந்த பொன்னுலகு மதன்மே லுலக மூன்றுமய
னமரு முலகுங் கடந்ததன்மே லண்ட முகடுங் கிழித்தடரும்
பூணிற் பொலிந்த பதம்பெயர்க்கப் போதா வுலக மப்பதத்தாற்
புகலில் சிறியே மிழைத்தசிற்றில் பொறுத்த லுனக்குப் பொருளா
சேணிற் பொலியுந் திருநாட்டுச் செல்வா சிற்றில் சிதையேலே[மோ
தெய்வத் திருநான் மறைபுகலுந் தேவே சிற்றில் சிதையேலே. (ரு)

வே று.

வானகத் திழியுங் கங்கைநீர் மொண்டு மறைவிதி வழுவாமல்,
வனசநாண் மலரோன் கைக்கமண் டலத்தால் வாசமென் புனலாட்
டித், தேனக முரலு மலர்த்தொடை புனைந்து திருமணி விளக்காட்
டத், திகழ்கழற் காலான் முத்தினங் கொழித்துச் சிறியபொற் க
லத்திட்டுப், போனகஞ் சமைத்து மலர்க்கறி யமைத்துப் பொய்தன்
மங்கையரோடும், புனையிளம் பாவைக் கின்னமு தருத்திப் பொலிவு
று மணிபூட்டி, மானகர் மறுகி லாடயா மிழைத்த மணற்சிற்றில் சி
தையேலே, மஞ்சினந் தவழு மிஞ்சிசூழ் கோட்டி வான்சிற்றில் சி
தையேலே. (சா)

பஞ்சணி பதத்தா ணறுந்தகி கடைந்த பதலையை யுடைத்தோடப்
படிமுழு தமைந்த திருவயி றடங்கப் பன்மணிச் சிறுதாம்பால்
வெஞ்சின முதிரு மவளுமன் றுரலில் விசித்திட வீர்த்தோடி
வித்தக ராக மருதிரண் டனையும் வீழ்த்துநின் சிறுதாளாற்
செஞ்சிலம் பரற்ற மேகலை புலம்பத் திருமுகம் வியர்ப்பேறச்
சிற்றிடை வருந்தக் கைத்தல மலராற் சிலைநுத லிளவேய்த்தோள்
வஞ்சியர் குழுமி வண்டலி னிழைத்த மணற்சிற்றில் சிதையேலே
மஞ்சினந் தவழு மிஞ்சிசூழ் கோட்டி வான்சிற்றில் சிதையேலே. ()

பாதவ நிழற்றுங் கானகத் துறைந்து பழஞ்சரு கிலைதுய்த்தும்
பனிபொழி மதியிற் படர்புனல் புகுந்தும் பகற்கதி ரழல்காலு

மாதப மதனி லேந்தழ னடுவி லமர்ந்துநெய் சொரிவேள்வி
யனைத்தையும் புரிந்து மனத்துற வடைந்து மைம்புலன் களைந்திட்ட
மாதவர் மறைபி னோதுதற் கரிதாய் வானவர் வணங்குதற்கரிதாய்
மணிச்சிலம் பரற்ற விடைச்சியர் குரம்பை மனைதொறுந் திரிந்துழல்
மாதவமுகுந்தயாதவயாஞ்செய்மணற்சிற்றில்சிதையேலே[பதத்தான்
மஞ்சினங் தவழு மிஞ்சிசூழ் கோட்டி வரன்சிற்றில் சிதையேலே.(அ)

வேறு.

மத்த கயத்தை யுரித்த வொருத்தன் வளைத்த பொருப்பு விலான்
மடிவில் புரத்தினர் முடிவு பெறக்குட வடிவ மெடுத்திடையே
வைத்த கிணற்றமிர் தத்தை யடுத்து மடுத்து விடுத்துமலர்
மைந்தனெனுஞ்சிறு கன்றொடு நின்று வயந்தரு சுந்தரனே
முத்த மதிக்குடை பெற்ற வரக்கனை மூச்சிரனைக் கரனை
முட்டிக னைப்பொரு தட்ட சமர்த்த முலைக்க ணிடைச்சியர்தஞ்
சித்த முருக்கி யணைத்த புயப்புயல் சிற்றில் சிதைத்திடலே
சித்த சனைத்தரு முத்தம புத்திர சிற்றில் சிதைத்திடலே. (கூ)

கச்சுமு லைச்சயி லச்சன கிக்குறு கட்டமொ ழித்தவனே
கட்குவ ளைக்கணர் தொட்டில ரென்றெறி கட்டை மிதித்தவனே
நச்சு விளைத்திடு பற்பணி யுச்சியி னட்ட மிழைத்தவனே
நற்றரு வைப்புவி நட்டொரு சிற்றிடை நட்புவிளைத்தவனே
பிச்சை யறுத்த தவத்தரு முட்புக வெட்டறு மெய்ப்பதனே
யெற்று திரைக்கடல் சுற்று மதிற்றுவ ரைப்பதி யுற்றவனே
செச்சை யணிக்குட விக்கொரு புத்திர சிற்றில் சிதைத்திடலே
சித்தச னைத்தரு முத்தம மைப்புயல் சிற்றில் சிதைத்திடலே. (க0)

## கூ-வது சிறுபறைப்பருவம்.

மாறுகி மாயம் விளைத்தமா ரீசனுயிர் மாயக் கரன்முதலினோர், மண்மீது வீழவெங் கணைதொட்ட ராகவ மரைக்குலந் திரிதருபெருங், காரொரு முல்லையங் கன்னியர் முயங்குதோட் காளைநின் பணிமருத, கடவுளர் பெரும்படைக் கடலுடைத்தாடுவன் கட்பசுங் குருதிதோ ய்விண், மீறுவல் சேர்பிறை யெயிற்றுடைப் பகுவாய் விராதனை மடித் துரற்கால், வேழத் தினைச்செருத் தாடரவின் மீதேறி விளையாடுமெ ன்கதலியின், றேனூறு பாய்கின்ற கோட்டிவள நாடநீ சிறுபறை முழ க்கியருளே, செறுநரை யுழக்கியடி யுறுநரை விளக்குமுகில் சிறுப றை முழக்கியருளே. (க)

வான்புக்க நெடுநிலைக் கோபுர மெனுங்கனக வடமேரு கிரியு
மதுசூழ், வருபெருந் தீவமெனு மணிமறுகு மிடையிடை வதிந்த
டல் பொருவாவியு, மான்புக்க மதிதவழு மாடமென் றுரைசெய்யு
ல மால்வரையு நகர்சுலாவி, வளரரண மாஞ்சக்ர வாளமும் மது
ழ் மகோததி யெனுங்கிடங்குஞ், சூன்மிக்க சங்கங் கறங்குமணி முத்
தமாஞ் சுரநதியு மருகுசெறியுஞ்,சுடர்விமா னமெனுஞ் சுவர்க்கமு ம
தன்மணித் தூவியெனும் வைகுந்தமுந், தேன்புக்க மலர்நறும் பொ
ழிலுமலிர் கோட்டியன் சிறுபறை முழக்கியருளே, செறுநரை யுழ
கியடி யுறுநரை விளைக்குமுகில் சிறுபறை முழக்கியருளே. (௨)

குருகமர் தளிர்க்கையிடை மடவியரொ டொப்பரிய குரவைநட
மிட்டுமெழில்கூர், குடநட மிழைத்துமெழு குரல்விரி புழைச்சிறிய
குழலிசை யிசைத்துமறுகால், முருகமர் படப்பைமலர் செருகியவர்
மொய்த்தகுழன் முகிலினை முடித்துமணிசேர், முலையிணை பிடித்து
முயர் கலையினை நெகிழ்த்துமதன் முதுகுதர வெற்றியொடிதழ், பரு
கியணை வுற்றுமவர் விரகமத கற்றுபர படியொடு சுவர்க்க முமலர்ப்,
பதுமனுல கத்தொடுயர் பலவுலகு மொத்தகண பணவுரக ருற்றபதி
யுந், திருமருவு முத்திநக ரமுமுனதெ னக்குலவு சிறுபறை முழக்கி
யருளே, செறுநரை யுழக்கியடி யுறுநரை விளைக்குமுகில் சிறுபறை
முழக்கியருளே. (௩)

கனபடல மொத்துமெறி கடலலைக ளொத்துமுயர் கனகவரை
யொத்தும்வருநீள், கயதுரக சித்ரரதர் கபடமொ டடர்த்துவரு கள
மிசை விழித்துணையினுங், கனலெழ விழித்துவரு நரபதியொ டுற்ற
சமர் கருதுபொழு தர்ச்சுனனுறுங், களையகல மற்றவர்கள் கணமு
டைய வத்தமுறு கனவளை முழக்குமதிபா, சனகர்சுகர் முத்தர்தொ
ழு சரணயு களக்குரிசில் சததள மலர்க்குளுலவுந், தளிரியல் பொரு
ட்டுததி தனிலணை வகுத்தமரர் தமதிடர் தவிர்த்தமுதல்வா, தினகர
னை யொத்தொளிரு மணியிடை வெதுப்பியொரு சிறுபறை முழக்கி
யருளே, செறுநரை யுழக்கியடி யுறுநரை விளைக்குமுகில் சிறுபறை
முழக்கியருளே. (௪)

பெருவரை யெனத்திகழு மிருபுய மிசைச்சுருதி பிரமர மிசை
த்துநுகரும், பிரசநிறை வுற்றுமணம் விரிதுளவி ணைத்தபர பிரளய
சலத்தினிடையே, யொருதவ மியற்றுசிறு முனிதினை சுழற்றவதி
லுறுகணுறு மப்பொழுதுமீ, துயர்வட விலைக்கண்வளர் மகவினுரு

வுற்றவனை யுதரமதில் வைத்து நெடுநாள், மருவிட வனைத்தலகி னெடுகிலே கிறுத்தியவன் மறதியுற வற்றியுமறு, மகரசல திப்புனல்கொளுலகினுமிழ் வுற்றமுனி வரனுரையை மெச்சுபொருளே, திருவனாயினிற்கனக மடியொளிபெ றக்குலவு சிறுபறைமுழக்கியருளே, செறுநரை யுழக்கியடி யுறுநரை விளக்குமுகில் சிறுபறை முழக்கியருளே.

வேறு.

களியளி பொங்கிய தமர மிகும்பொழில் கஞுலு நெடும்புதுவைக்
கன்னி நறுங்குழ றன்னி யுலர்ந்திடு கடிமலர் மாலையொடு
களியமு தம்பொழி புதுமொழி கொண்டவ னவிறரு செந்தமிழா
கவையில் பெருந்தொடை துளவி னெடும்புனை நகமிக ழம்பயனே
வெளிமுக டண்டமு முடைபட வெண்டிசை விருதரொ டண்டர்களும்
வெருவுற வன்றறி சடசெட னும்படி வெடிபட வந்தருளுந்
தெளிமறை யந்தணர் புகழ்நர சிங்கசி சிறுபறை கொட்டுகவே
திருவடி யிற்பகி ரதிதரு மச்சுத சிறுபறை கொட்டுகவே. (சு)

வாருறு கொங்கைய டேவகி தந்தருண் மகனே சகமேழு
மணியுத ரந்தனி னிலவிட வுண்டருண் மதிமுக சுந்தரனே
நீருறு தெண்டிரை மோது நெடுங்கட னிலமா மகளாகு
நிரைவளை மங்கையி னொடுகரு டன்றனி நிமிர்புய நின்றுடனே
பாருறு மங்கையர் தீர வருந்துயர் படைமா முரனுகும்
பதகனை யுந்திற னரகனை யுந்தெறு பரிதி யுறுங்கரனே
சீருறு மண்டர்க டேரவரும்பொருள் சிறுபறை கொட்டுகவே
திருவடி யிற்பகி ரதிதரு மச்சுத சிறுபறை கொட்டுகவே. (எ)

புனைமணி யணிபரி புரமொடு பலவணி பொற்பத மிட்டேமும்
புழுகொடு நறுநெய்பெய் துளகுழ லளியுழு புட்ப நிறைத்தேமும்
மனைதொறு மடவியர் வசைமொழி தரவில் வழக்கை யுரைத்தேமும்
வழிவழி யடியர்க டமைவுற வுனைமடி வைத்து வளர்த்தேமுஞ்
சினையடை சகம்வரு பொழுதினின் மனைகொடு திட்ப மிழைத்தேமுந்
திருநுத லிடுபொடி யொடுபல பொருள்கொடு திட்டி கழித்தேமுந்
தினமுறு மகிழ்வொடு பெருமகிழ் வுறவொரு சிறுபறைகொட்டுகவே
திருவடி யிற்பகி ரதிதரு மச்சுத சிறுபறை கொட்டுகவே. (அ)

சலநிதி பொங்கிய பிரளய வெம்புன றனிலுலவுங் கயலாய்ச்
சதுமறை கொண்டிடு மவுணனை வென்றுயர் சலதி கடைந்திடுநாட்

கலைமதி யென்றுயர் தறியி னெடுங்கிரி கழல்வது கண்டுயர்வான்
கமட மெனுந்திரு வுருவு கொளும்பர களிநற வம்பருகிச்
சிலையிணை தங்கிய நுதலிடை மங்கையர் செழுமுலை யின்பமொடுந்
தினகர னன்றருள் யமுனை நெடுங்கரை திகழ விருந்தவனே
குலமல ரங்கையி லலமுயர் சுந்தர கொட்டுக சிறுபறையே
குடமினொ தங்கிய வளைநுக ரந்தண கொட்டுக சிறுபறையே. (சு)

துகளறு நவமணி புனைதர வெழில்பெறு தொட்டி லமர்ந்தவனே
துணைமுலை தரவரு மலகையி னமுதொடு தொட்டயி ருண்டவனே
கருபமு மலமர வருசக டனதுயிர் கக்க வுதைந்தவனே
கயிலையு மயர்வுற வருமெழு விடையொடு கட்டி யணைந்தவனே
முகிலிடி யெனவிடி படவிரு மலரொடு முட்டி பொருங்கரனே
முதுபய சலதியி னிடையர வமளியின் முற்று முறைந்தவனே
குகையினை நிகர்குரு கலகினை வகிர்பர கொட்டுக சிறுபறையே
குடமட வியரொடு நடமிடு மழைமுகில் கொட்டுக சிறுபறையே. ()

---

## கo - வது. சிறுதேர்ப்பருவம்.

திருநான் மறையா முருட்கியையத் தெய்வா கமமா மச்சிணைத்துச்
செறியுஞ் சடங்கக் காருட்டித் திகழ்வே தாந்தக் கூம்பமைத்துக்
கருமா முகில்போற் றிருமேனிக் கண்ணன் கவின்றே ருருட்டிவரக்
கண்டார் கண்டார் பிறப்பகற்றக் காணா் காணு ரெனக்கலிக்கும்
பருமா மணியி னிரைகுலுங்கப் பருவ மடவார் கலைக்தெறிந்த [குந்
பசும்பொற் கலனு மிளங்குமரர் பணைத்தோள் வடமுங் கிடந்திமைக்
தெருவாழ் வுறநீ விடுக்குமொரு சிறுதே ருருட்டி யருளுகவே
திருக்கோட் டியில்வாழ் பரஞ்சுடரே சிறுதே ருருட்டியருளுகவே.

மின்னார் வயிரத் தச்சிழைத்து விளங்கும் பவளக் காருட்டி, வி
ரியும் பசும்பொன் னுருளமைத்து வெயில்கான் மணிப்பொற் கூம்ப
மைத்துப், பொன்னார் தரள மணிவடங்கள் பூட்டி யனையின் மணி
கலிப்பப், புறத்துச் சிறுவர் நடத்திவரும் பொறித்தேர் நாப்ப ணட
ர்த்துவரு, மொன்னார் கலங்கப் பாண்டுமக னொருத்தன் றனித்தேர்
நடத்திவரு, மூவமை யிதுவே யாகுமென வுலகோர்க் குணர்த்து
முறைபோலத், தென்னார் மறுகிற் கொடிஞ்சிநெடுஞ் சிறுதே ருருட்
டி யருளுகவே, திருக்கோட் டியில்வாழ் பரஞ்சுடரே சிறுதே ருருட்
டி யருளுகவே. (உ)

நெஞ்சிற் களிப்பு மிகுந்தாயர் நீலக் கருங்கட் கடைதுளிப்ப
நிதமும் விளையாட் டயர்குழவி நேயத் தவரும் பின்றொடர
அஞ்சிற் குழற்பூ மகளிருக்கு மணிமார் பகத்தின் மணியொளிர
வம்போ ருகப்பொற் பதம்பெயர்த்திட் டவனி மடவா ளடிவருட
மஞ்சிற் பொலியுந் திருமேனி வண்ண நறுந்தா ளான்மறைப்ப
மணிபோன் முறுவ லிலவெறிப்ப மதிபோன் முகத்தில் வியர்வரும்பச்
செஞ்சொற் குமரா நவமணிப்பொற் சிறுதே ருருட்டி யருளுகவே
திருக்கோட் டியில்வாழ் பரஞ்சுடரே சிறுதே ருருட்டி யருளுகவே.

மூசுங் களிவண் டுணைப்பொழியு மும்மைக் கரடக் கரியினம்போன்
முகிறோய் குடுமி நெடுமாட முன்றிற் குளிக்கு மொய்குழலார்
தாசு பொதியு முலைக்கமைந்த தொய்யி லெழுது துறைச்சாந்துஞ்
சுரிமென் குழலும் புலர்த்துமகிற் றூம முகிலி னிருள்விளைப்ப
வீசுங் கிரணப் பரிதியென மிளிரு மணியின் றிரள்பரப்பும்
வெயிலால் விளங்குந் திருநகர வியன்மா மறுகிற் சிறுவரொடுந்
தேசு பொலியுந் திருமுகத்தாய் சிறுதே ருருட்டி யருளுகவே
திருக்கோட் டியில்வாழ் பரஞ்சுடரே சிறுதே ருருட்டி யருளுகவே.

வேறு.

பெருநற வங்குடிக்கு மறுகான் மயக்க முறவே
பெடையொடி தந்திளைத்து விரிபூ விடைக்கண் வளரு
முருக விழுங்கடப்ப வனமா தரித்தவ னூறு
முனிவ னுளங்களிப்ப வருபாத பற்ப யுகளா
அருகு வருங்கறுத்த வரைபோன் முழக்க மிகவே
யமர்பொரு துந்தடக்கை யடல்வே லரக்க ருடனே
செருமலை யும்புயத்த சிறுதே ருருட்டி யருளே
சிலைமரு வுங்கரத்த சிறுதே ருருட்டி யருளே. (ரு)

கள்ளறு நறுமலர்க் கற்பக நிழற்றங்கு காவலன் வெண்புரவி
க், கடவுளா நிரையுமிரை கொள்ளச் செழித்தோங்கு கன்னற் பெ
ங்கழனியிற், புள்ளறு மரைமலர்க் கொள்ளை வெள் ளோதிமம் புடை
ய் கயற்குவெருவிப், பொழிலிடை யுறங்கவப் பொழிலிற் கருங்கு
ல்கள் பூங்கரும் பிழிசாறுடீஉ, முள்ளறு மென்புகைப் படலந் தழை
தல்கண் டோங்குகன படலமென்ன, வொலிகரந் தச்செறுவி டை
மல மலரினி லுறங்குங் கருங்குவளையின், றெள்ளறு நறைபாய்
ற்றிருக் கோட்டியன் சிறுதே ருருட்டியருளே, திருமா மகட்கி
றவ பெருநான் மறைக்கொருவ சிறுதே ருருட்டியருளே. (சு)

கூற்றிற் கொடுங்கொலை யியற்று செங்கண்ணினர் கொங்கை யிணை தங்குமுத்துங், குளிர்திருப் பாற்கடற் பெருவாவி தருவளைக் குலமுத்து மணிமுத்தமா, மாற்றிற் படுஞ்சங்க வெண்முத்து மிளிர் கொண்ட லள்ளித் தெளிக்குமுத்து, மங்கட் கரும்பீன்ற வணிமுத்து மளிகுமுறு மம்போரு கத்தின்முத்துங், காற்றிற் கறங்கியுதிர் வேய் முத்து மலைவீசு கடன்முத்தி னொடுமளவளாய்க், கதிர்மதியி னிலவெழப் பகலிடை மலர்ந்தசெங் கஞ்சத்தி னோடுமெள்ளற், சேற்றிற் செழுங்குமுத மலர்திருக் கோட்டியன் சிறுதே ருருட்டியருளே, திருமா மகட்கிறைவ பெருநான் மறைக்கொருவ சிறுதே ருருட்டியருளே ()

மருவாரி தழ்க்கமல மலர்மேன் மிதித்தளிகள் வரிபாட னெக்கமதுவின், மணநா றிடக்குமுத மலர்மேல் வளைக்குவைகண் மலிகால் விதர்ப்பனருளும், பெருவார் முலைக்குமரி புணர்தோ ளிணைக்குமர பிரமாதி கட்குமரியோய், பிசிதா சனர்க்குவகை தருமூ ரழித்தமரர் பெறவா னளித்தமுதல்வா, தருவார் மலர்ப்பொழிலி னிரைதேர் முசுக்கலைக டடமார் குடக்கனியையமத், தளமா முழக்கவிசை கிளி பாட பொய்த்துமயில் தகவாட வைப்பதியினிற், றெருவார் குலக்குமர ரொடுநீ விடுக்குமொரு சிறுதே ருருட்டியருளே, திருமா மகட்கிறைவ பெருநான் மறைக்கொருவ சிறுதே ருருட்டியருளே. (௮)

கடநாக மெய்த்தலறி யிடர்கூர் தடத்தருகு கடிதோடி யுத்தமர் தொழுங், கனகாசலத்தினுறு ககராச னெய்க்கவரு கருணாநிதிக்கடவுளே, தடநாக ரெய்த்துவிழ வளையூதி யொத்தபல தளவான கர்த்தருவையித், தரைமேலழைத்தவனி மடமாது வக்கவரு டருதா மரைக்கணரசே, மடநா கணைத்தபணை மிதிலா புரிக்கரசன் மருகா வணக்கமிலதா, மணிமா முடிக்குரிசில் கிளையோ டறத்துணைவன் வருதேர் நடத்துவலவா, திடநாக ரத்நமணி முடிமே னடித்தபர சிறுதே ருருட்டி யருளே, திருமா மகட்கிறைவ பெருநான் மறைக்கொருவ சிறுதே ருருட்டியருளே. (௯)

பருமாத வத்தவனி மடமா தளித்தவுயர் பதுமா சனத்திருவொடும், பயில்கார் முகத்தையிரு துணியா யொடித்தரகு பதிகோ சலைக்குமகனே, மருவார் குலத்தைமுத லறவீசு சக்ரதர மகரா லயத்தினிடைவாழ், மணிமாட முற்றிலகு துவராப திக்கிறைவ மதுரா புரிக்குமரசே, குருகூர் முனிக்குமிரு முருகூர் மலர்க்கணிகொள் குழன்மா தினிக்குமினியோய், குலவாத பத்திரமு மலையா வெடுத்தமரர் குலநாத னுய்த்தமுகிலின், செருவான் மலைத்துநிரை வெருவா தளித்தமுகில் சிறுதே ருருட்டி யருளே, திருமா மகட்கிறைவ பெருநான்மறைக்கொருவ சிறுதே ருருட்டி யருளே. (௧௦)

முற்றிற்று.

